நூலின் பெயர் - **சிங்கர்குடிக்கோயில் தலமஹாத்மியம்**

முதல் பதிப்பு - 1000 பிரதிகள் (1997)
இரண்டாம் பதிப்பு - 1000 பிரதிகள் (1999)
மூன்றாம் பதிப்பு - 1000 பிரதிகள் (2000)
நான்காம் பதிப்பு - 1000 பிரதிகள் (2003)

இலவச வெளியீடு - (Postage Extra)

வெளியிடுபவர் - **ஸ்ரீ மாலோல கைங்கர்ய சபையினர்,**
புதுச்சேரி.

ஆசிரியர் - திரு. ஆர். சுப்பிரமணியன்

அச்சிட்டோர் - கம்பன் மறுதோன்றி அச்சகம்,
புதுச்சேரி-4, பேசி : 2359587.

# ஸ்ரீ கிருஷ்ணாரண்யம்

என்னும்

# சிங்கர்குடிக்கோயில் தலமஹாத்மியம்

நான்காம் பதிப்பு

ஆக்கியோன்

தாஸன்

ஆர். சுப்பிரமணியன்



ஸ்ரீ அஹோபில மடம் 44, 45 வது ஜீயர்ஸ்வாமிகள்.

ஸ்ரீ

*ஸ்ரீ மதேலக்ஷ்மீநரஸிம்ம பரப்பிரம்மணே நம:*
*ஸ்ரீமதே ஸ்ரீவண் சடகோப ஸ்ரீ நாராயண*
*யதீந்திர மகாதேசிகாய நம:*
*ஸ்ரீமதே லக்ஷமிநரஸிம்மாய நம:*
*நதோஸ்ம்யநந்தாய துரந்த சக்தயே*
*விசித்ரவீர்யாய பவித்திர கர்மணே*
*விச்வஸ்ய ஸர்கஸ்திதிஸம்யமாந்குணை:*
*ஸ்வலீலயா ஸந்ததம் அவ்யயாத்மனே*

# ஸமர்ப்பணம்

சிங்கர்குடி (சிங்கர் கோயில்) என்னும் ஸ்ரீலக்ஷ்மிநரஸிம்மஸ்வாமி க்ஷேத்திரத்தின் தல வரலாறு கூறும் இச்சிறு நூல் ஸ்ரீ அஹோபில மடத்தில் எழுந்தருளி இருக்கும் இக்காலப்பீடாதிபதி 45ஆவது பட்டம் ஸ்ரீவண்சடகோப ஸ்ரீ நாராயண யதீந்திரமஹா தேசிகனின் ஆணையை முன்னிட்டுச் சிங்கர் கோயிலில் எழுந்தருளி இருக்கும் ஸ்ரீலக்ஷ்மிநரசிம்மனின் திருவடித்தாமரைகளில் அடியோங்களால் சமர்ப்பிக்கப்படுகிறது.

இலவச வெளியீடாகிய இச்சிறிய நூல் மேற்படி ஸ்ரீமாலோலகைங்கர்ய சபையினரின் முயற்சியால் பிரசுரிக்கப்பட்டு ஸ்ரீலக்ஷ்மிநரசிம்மன் திருவடித்தாமரைகளில் 4வது பதிப்பாக சமர்ப்பிக்கப்படுகிறது.

ஸ்ரீ மாலோல கைங்கர்ய சபையினர்

புதுச்சேரி
மே - 2003

ஸ்ரீ

# மதிப்புரை

ஸ்ரீய: பதியான நாராயணன் இவ்வுலகில் ஸாதுஜனங்களைக் காப்பதற்காகவும் ஸாதுஜனங்களைத் துன்புறுத்தும் துஷ்டஜனங்களை அடக்குவதற்காகவும் பல அவதாரங்களை மேற்கொண்டான். அவற்றுள் பக்தாக்ரரேஸரனான ப்ர்ஹ்லாதனைக் காப்பதற்காகவும் அவனை நலிந்த அவன் தகப்பன் ஹிரண்யகசிபுவை அழிப்பதற்காகவும் நரசிங்க உருவாய் நாராயணன் அவதரித்தான். அந்த நரசிங்கப் பெருமான் அர்ச்சாரூபியாகப் பல க்ஷேத்ரங்களில் கோயில் கொண்டு எழுந்தருளிப் பிற்காலத்தவர்களையும் தன் அருளால் ஆட்கொண்டிருக்கிறான். அத்திருத்தலங்களுள் புதுச்சேரியின் அருகிலும் திருவஹீந்திரபுரத்தின் அருகிலும் உள்ள சிங்கர்கோயில் என்பதும் ஓர் உயர்ந்த திருத்தலமாகும்.

இத்திருத்தலம் இக்காலம் தமிழ்நாட்டில் தென்னார்க்காடு மாவட்டம் கடலூர் வட்டத்துள் இருக்கிறது. சிங்கர்கோயில் என நரசிம்மர் பெயராலேயே வழங்கப்படுகிறது. இங்குக் கோயில் கொண்டுள்ள மூலவர் நரசிங்கர் பதினாறு திருக்கைகளுடன் ஆச்சரியமாகக் காட்சியளிக்கிறார். இவரைத் தரிசித்தால் எல்லா வகைப் பாபங்களும் குறைகளும் நீங்கும்.

வஸிஷ்டமாமுனிவர் இத்திருத்தலத்தில் நரசிங்கரைத் தியானம் செய்துகொண்டு தவம்புரிந்து ஸித்தி பெற்றுத் தம்முடைய பாபங்களைப் போக்கிக் கொண்டார்.

இந்த ஊரின் பெயர் சிங்கர்கோயில். புராணப் பெயர் கிருஷ்ணாரண்யக்ஷேத்ரம். தாயார் பெயர் கனகவல்லித் தாயார். விமானத்தின் பெயர் பாவன விமானம். இங்குள்ள தீர்த்தங்கள் ஜமதக்னிதீர்த்தம், இந்த்ரதீர்த்தம், பார்க்கவதீர்த்தம், வாமனதீர்த்தம், கருடதீர்த்தம் என ஐந்து.

இங்கு அற்புதமாகச் சேவை தரும் நரசிங்க மூர்த்தியின் பதினாறு கைகளுள் காணப்படும் முத்திரைகள்.

வலப்புறம் 1.பதாகம் 2.ப்ரயோகசக்ரம் 3.குத்துக்கத்தி 4.பாணம் 5.அசுரனின் தலையை அறுத்தல் 6.கத்தி (அசுரன் ஒருவனைக் கொல்லுதல்) 7.இரண்யனின் காலை அழுத்திப்பிடித்தல் 8.இரணியனின் குடலைக்கிழிப்பது. இடப்புறம் 9.குடல் மாலையைப் பிடிப்பது 10.சங்கம் 11.கேடயம் 12.வில் 13.கதை 14.வெட்டப்பட்ட தலை 15.இரணியனின் தலையை அழுத்துவது 16. குடலைக் கிழிப்பது என்பன காணப்படுகின்றன.

மூலமூர்த்திக்குக் கீழே இடப்புறம் இரணியனின் மனைவியான நீலாவதி, கீழே வலப்புறம் மூன்று அசுரர்கள், ப்ரஹ்லாதர், சுக்ரர், வஸிஷ்டர்

ஆகியவர்கள் இருக்கிறார்கள். வடக்கு நோக்கியவர்களாகச் சிறியவடிவில் யோகநரசிம்மர், பாலநரசிம்மர் என இருவர் இருக்கிறார்கள்.

இவ்வாலயத்தில் வைகானஸ ஆகம முறைப்படி பூஜைகள் நடக்கின்றன. அயிந்தை தோத்திரமாலை என்கிற நூலில் தேவநாதனே சிங்கர்கோயிலில் நரசிங்கராக இருக்கிறார் எனப்படுகிறது. நரசிங்கனே தெய்வநாயகனாகக் காட்சியளிக்கிறார் என்று திருமங்கையாழ்வார் அருளிச் செய்கிறார்.

இக்கோயிலில் ஆண்டாள், இராமர், தாயார், ஆழ்வார்கள் சந்நிதிகளும் உள்ளன.

ஸ்ரீ அஹோபில மட ஆஸ்தானத்தை அலங்கரித்த நான்காவது பட்டத்து அழகியசிங்கர் ஸ்ரீ முஷ்ணத்திலிருந்து பாரத தேசயாத்திரை செய்துவிட்டுக் கடைசியாகச் சிங்கர்கோயிலில் எழுந்தருளித் தவம் செய்து திருநாடலங்கரித்தார். அவருடைய சமாதிஸ்தலத்தைப் பிருந்தாவனமாக அமைக்க ஏற்பாடுகள் நடைபெறுகின்றன.

அந்த அழகியசிங்கரின் திருநாமம் ஸ்ரீவண் சடகோப ஸ்ரீ ஸ்ரீநிவாஸ யதீந்த்ர மஹாதேசிகன். திருநக்ஷத்ரம் மார்கழி சித்திரை. இந்த ஜீயர் சிங்கர்கோயில் ஆலயத்தில் காலக்ஷேபம் ஸாதித்துக் கொண்டிருந்ததாகவும் தெரிகிறது.

இவ்வாறு பெருமை வாய்ந்த சிங்கர் கோயிலின் வரலாறுகளைக் கிருஷ்ணாரண்ய மஹாத்மியம் என்கிற நூல் கூறுகின்றது. அவற்றை மிக விரிவாகத் தமிழில் புலவர் ஆர்.சுப்ரமணியன் என்பவர் எழுதித் தந்துள்ளார். இதை வாசித்துச் சிங்கர் கோயிலின் பெருமையையும் ஊரின் வரலாறுகளையும் கோயிலின் அமைப்பையும் கல்வெட்டுச் செய்திகளையும் நரசிங்கமூர்த்தியின் விளக்கத்தையும் நான்காம் பட்டத்து அழகியசிங்கரின் பெருமையையும் நன்கு தெரிந்துகொள்ளலாம். இந்நூல் எல்லோருக்கும் பயனைத் தரும்.

நாவல்பாக்கம் **என்.எஸ்.ராமானுஜ தாத்தாச்சாரியார்**

# முன்னுரை

நல்லனவற்றைச் செய்பவன் தீயதை அடைய மாட்டான் என்பது கண்ணனின் திருவாக்கு. இத்திருத்தலத்தின் பெருமையைப்பல ஆண்டுகளுக்கு முன் மாலைமலர் தமிழ்ப் பத்திரிக்கையில் வாரம் ஒருமுறை சிங்கர் கோயில் வரலாறு என்ற தலைப்பில் எழுதினேன்.

எனக்கு இயல்பாகக் கல்வெட்டுக்களைப் படிப்பதில் ஆர்வமுண்டு. மிகவும் பின் தங்கிய நிலையில் சிங்கர் கோயில் ஆலயம் இருந்த காலத்தில் அங்குள்ள கல்வெட்டுக்களை எழுதி வந்தேன். சுமார் 25 ஆண்டுகளுக்கு முன்பு பரமபதவாசி வியாகரண சிரோமணி ஸ்ரீஉவே ராமாநுஜ ஐயங்காருடன் சிங்கர்குடிக்கோயில் செல்ல நேர்ந்தது. இதற்குச் சில ஆண்டுகள் கழித்து இப்பொழுது ஸ்ரீ உ.வே.பத்தங்கி விஜயராகவாச்சாரியசுவாமி சிங்கர் கோயிலைப் பற்றி எழுதவேண்டும் என்று எனக்கு ஆணையிட்டார். அவருடைய ஆணையைக் கடக்கத் துணிவின்றிப் புத்தகமாக எழுதத் துணிந்தேன். இதற்கிடையில் வடமொழியில் ஸ்ரீகிருஷ்ணாரண்ய மஹாத்மியம் என்ற பெயரிலுள்ள நூலின் பிரதி கிடைத்தது. அதன் தமிழ்ச்சுருக்க மொழிபெயர்ப்பே இந்நூல். எனவே, ஸ்ரீ பகவான் என்னை இப்பணியில் தொடர்ந்து ஈடுபடத் தூண்டுகிறான் என்பதற்கு மேலே கூறிய நிகழ்ச்சிகள் சான்று.

மாலை மலரில் தொடர் முடிந்த சில ஆண்டுகளில் சிங்கர் கோயில் சம்புரோக்ஷணமும் நடந்தது.

ஸ்ரீ உ.வே.பத்தங்கி விஜயராகவாச்சாரியார் சுவாமியின் ஆர்வமும் அவருக்கு அகோபில மடம் ஜீயருடைய பிருந்தாவனத்தின் வளர்ச்சியில் இருக்கும் முயற்சியும் போற்றத்தக்கன. இது பலிதமாக வேண்டும் எனச்சிங்கர் பெருமாளை பிரார்த்திக்கிறேன். எனக்கு இவ்வாய்ப்பு அளித்த ஸ்ரீ சிங்கர் பெருமானுக்கும், உ.வே.ஸ்ரீசுவாமிக்கும் என்னுடைய நன்றியின் அடையாளமாகப் பிரணாமத்தினைச் சமர்ப்பிக்கிறேன்.

இந்நூல் இனிதே வெளிவரச் செய்த ஸ்ரீமாலோல கைங்கரிய சபா அங்கத்தினர்களை மாலோலனாகவே எண்ணி நன்றிப் பிரணாமங்களைச் சமர்ப்பிக்கின்றேன்.

இங்ஙனம்,

தாஸன் *ஆர்.சுப்பிரமணியன்*

ஸ்ரீ:

*கிருஷ்ணாரண்யே ந்ருஸிம்ஹம் ஸுரமுனி*
*விநிதம் பாவனாக்யே விமானே*
*ஸ்தம்பம் பித்வா நகாக்ரை ரிபுதள நபரம்*
*க்ஷோடசே பாஹு பிச்ச சங்கம்,*
*சக்ரம், கிருபாளம், ஹல, முசல, கதா, சாங்குசம்,*
*பிந்திபாலம், பிப்ரம்தம், பீமரூபம் தநுஜன*
*ஸுமுகம் பாவபாத்யந்த ரங்கே.*

# தென்னார்க்காடு மாவட்டம்

## கடலூர் வட்டம்

## சிங்கர்கோயில் என்ற பழைய பெயருடைய சிங்கர்குடிக்கோயில்

இக்காலம் தமிழ்நாட்டில் தென்னார்க்காடு மாவட்டம், கடலூர் வட்டத்துள் இருக்கும் சிங்கர்குடிக்கோயில் பண்டைய நாளில் ஜயங்கொண்ட சோழ மண்டலத்துள் இருந்தது.

தொண்டை நாட்டுள் ஜயங்கொண்ட சோழ மண்டலத்துள் அபிசுப்பாக்கம் சிங்கர்கோயில் என்பது பெயர். இவ்வூரில் கோயில் கொண்டுள்ள நரசிம்மரின் பெயராலேயே இவ்வூர் சிங்கர்குடி என்று பெயர் பெற்றது. இவ்வூருக்கு வரலாற்றுப் பெருமையையும், புராணப் பெருமையும் உண்டு.

மார்க்கண்டேய புராணத்துள் நிருஸிம்ம வன மாஹாத்மியம் என்பது சிங்கர் கோயில் தல வரலாறு. இந்நூல் எட்டு அத்தியாயங்களை உடையது.

### *முதல் அத்தியாயம்*

முதல் அத்தியாயத்தில் ஜைமினி என்னும் ரிஷி ப்ருகு ரிஷியிடம் சென்று தமக்கு நல்லகதி அடைய வழி கூறவேண்டும் என்று கேட்க, முன் காலத்தில் நாரத முனிவர் இதே கேள்வியை நான்முகனிடம் கேட்டார். அவர் கூறிய பதிலை உனக்குக் கூறுகிறேன் என்று ப்ருகு முனிவர் தல புராணத்தைக் கூற ஆரம்பித்தார்.

ஜம்பூத்வீபத்தில் பரதகண்டத்துள் பாலாற்றுக்கு ஐந்து யோஜனை தூரம் தெற்கிலும், கிழக்குக் கடலுக்கு ஒரு யோஜனை தூரம் மேற்கிலும் பெண்ணையாறு, சிதம்பரம், காவேரி இவைகளுக்கு வடக்கிலும், காஞ்சீபுரத்திற்கு ஐந்து யோஜனை தெற்கிலும், திருவஹிந்திரபுரத்திற்கு ஒரு யோஜனை வடக்கிலுமுள்ளது நரஸிம்மவனம்.

இங்கு வாழும் எல்லாவகை மக்களும் தத்தம் செயல்களைச் செய்துகொண்டு நல்லவண்ணமே வாழ்கிறார்கள். இவ்வூரில் சென்று நரசிம்மரைத் தரிசித்தால் எல்லாவகைப் பாவங்களும் நீங்கி விடும்.

## *இரண்டாம் அத்தியாயம்*

முன் காலத்தில் அயோத்தியில் நிமி என்னும் அரசன் இருந்தான். அவன் தான் செய்யும் தந்தை சிராத்தத்திற்கு வசிஷ்டரை அழைத்தான். வசிஷ்டர் அரசனின் அரண்மனைக்குச் சென்று சிராத்த காரியங்கள் முடித்து உணவருந்த இலையில் அமர்ந்தபோது, அரசனிடம் பொறாமை கொண்ட அசுரன் ஒருவன் சமையற்காரன் வடிவில் வந்து வசிஷ்டருடைய இலையில் மாம்ஸ உணவைப் பரிமாறினான். இதனால், கோபமடைந்த வசிஷ்டர் அரசனைப் பார்த்து எனக்குப் புலாலுணவைப் பரிமாறியதால் நீ மாம்ஸத்தைச் சாப்பிடும் அசுரனாக ஆகவேண்டும் என்று சபித்தார்.

இதைக் கண்டு அரசன் மிகவும் வருந்தினான். எனினும், தான் செய்யாத குற்றத்திற்கு ஆழ்ந்து யோசனை பண்ணாமல் சபித்ததனால் அரசன் முனிவரைப் பார்த்து, உமக்கும் உருவமில்லாமல் போகட்டும் எனப் பதில் சாபம் கொடுத்தான்.

அரசனுடைய சாபத்தால் வசிஷ்டருக்கு உருவம் போய்விட்டது. பிரம்ம தேவனிடம் சென்று தமக்கு நேர்ந்த நிலையைக் கூறி வருந்தினார். பிரம்மதேவர், ஜம்பூத்வீபத்தில் பாரத வர்ஷத்திற்குச் சென்று தவம் செய் என்று கூறினார். உடனே, வசிஷ்டர் அரசனுக்கும் சாப விமோசனத்திற்கு வழிகூற வேண்டும் என்று கேட்டார். இதற்கு நான்முகன், நிருசிம்மனின் கைங்கரியத்தால் அரசனுக்கும் பழைய நிலை வரும் என்றார்.

## *மூன்றாம் அத்தியாயம்*

வசிஷ்டர் நிருசிம்ம வனத்திற்கு வந்து அங்கு ஒரு குகையில் தவமியற்றினார். இவருடைய தவத்திற்கு மகிழ்ந்த நான்முகன் வசிஷ்டர் முன் தோன்றி அவருக்கு உருவத்தை அடையும்படி அருள்புரிந்து மறைந்தான்.

வசிஷ்டர் மீண்டும் தொடர்ந்து பகவானைத் தரிசிக்க வேண்டும் என்ற உறுதியுடன் கடுந்தவத்தைச் செய்து வந்தார். இவருடைய தவத்திற்கு வானவர்கள் அஞ்சினர். இந்திரன், ரம்பை, மேனகை முதலான

தேவமாதர்களை அனுப்பினான். வசிஷ்டர், மேனகையினிடம் மயங்கினார். வானவர்கள் வெற்றியுடன் திரும்பிச் சென்றனர்:

## நான்காம் அத்தியாயம்

வெகுகாலம் மேனகையுடன் வாழ்ந்தார் வசிஷ்டர். ஒருமுறை அசரீரி கேட்டது. "வசிட்டனே! உனது தவம் தடைபட்டது. நீ தவத்தின் பயனை அடைய வேண்டுமானால் ஓர் உபாயம் கூறுகிறேன். நரசிம்ம வனத்தின் உட்பகுதியில் சென்று தவம் செய். அங்கு நிருசிம்ம ரூபியாக விஷ்ணு கோயில் கொண்டிருக்கிறார். அவருடைய அருளால் பலர் தவம் செய்து சித்தி பெற்றிருக்கிறார்கள்", இவ்வாறு அசரீரி சொல்லியதை வசிஷ்டர் கேட்டார்.

அவ்வாறே நிருசிம்மவனத்தின் உள்ளே சென்று சிங்கப் பெருமானைத் தரிசித்து பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து அங்குத்தவம் செய்ய ஆரம்பித்தார்.

## ஐந்தாம் அத்தியாயம்

மீண்டும், வசிஷ்டர் கடுமையான தவம் செய்ய ஆரம்பித்ததைக் கண்ட தேவர்கள், தேவேந்திரனிடம் சென்று தெரிவித்தனர். கோபங்கொண்ட இந்திரன் ஐராவதம் என்ற தன்னுடைய யானையின் மீது ஆரோகணித்து வந்து தனது ஆயுதங்களால் வசிஷ்டரை அடித்துத் துன்புறுத்தினான். எதற்கும் அசையாமல் நாராயண அஷ்டாக்ஷரியை ஜபம் செய்து கொண்டும் பகவானைத் தியானித்துக் கொண்டும் இருந்தார் வசிஷ்டர். தனது பக்தன் படும் துன்பத்தைக் கண்டு மனம் இளகிய சிங்கப் பெருமான் தனது சக்கரத்தை ஏவினார். பெருமானுடைய சக்கரம் இந்திரன், தேவர்கள் ஒவ்வொருவரையும் தாக்கியது. தேவர்கள் அலறினர்.

பின்னர் இந்திரனும் தேவர்களும் பகவானிடமும் வசிஷ்டரிடமும் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு தமதிருப்பிடம் சென்று சேர்ந்தனர்.

## ஆறாவது அத்தியாம்

இந்திரன் தான் செய்த அபராதத்தைப் போக்கப் பாவன விமானத்தின் பக்கத்தில் தீர்த்தத்தை உண்டாக்கி அதற்கு இந்திர புஷ்கரிணி என்ற பெயரைக் கொடுத்தான்.

வசிஷ்டர் உண்மை ஞானம் உண்டாகத் தவம் செய்ய எண்ணி வசிஷ்டர் என்ற பெயருடைய மனித உருவத்தை விட்டுவிட்டு அச்வத்த விருக்ஷமாக ஆகி நரசிம்மரின் முன்புறத்திலிருந்து தவம் செய்தார்.

இதே சமயத்தில் இந்திர புஷ்கரிணியின் அருகில் யக்ஞுகுப்தர் என்பவர் தவம் செய்து கொண்டிருந்தார். எதேச்சையாக அப்பொழுது அங்கு வந்த பிரகலாதரை யக்ஞுகுப்தர் வணங்கி வரவேற்றார்.

பிரகலாதரைப் பார்த்து யக்ஞுகுப்தர் எந்தவிதமான உபாயத்தால் பகவானைப் பிரத்யக்ஷமாகப் பார்க்க முடியும்? என்று கேட்டார். "தவம், கர்மாக்கள், வேதாத்யயனம் முதலானவற்றாலும் பகவானைப் பிரத்யக்ஷமாகப் பார்க்க முடியாது. (இந்த) ஆலயப் பிரதக்ஷிணம், உபவாஸம் இவைகளால் மாதவனைப் பிரத்யக்ஷமாகப் பார்க்கலாம். பக்திக்குத் தான் எளியவர்" என்று கூறி யக்ஞுகுப்தருக்கு நிருசிம்ம மந்திரத்தை உபதேசித்தார் பிரகலாதர். இம்மந்திரத்தை ஜபம் செய்துகொண்டே வந்தார் யக்ஞுகுப்தர்.

யக்ஞுகுப்தருக்குச் சித்திரை மாதம் சுக்ல பக்ஷத்தில் சித்திரை நக்ஷத்திரத்தோடு கூடிய பௌர்ணமியன்று நரசிம்மப் பெருமான் தரிசனம் கொடுத்தார்.

"யக்ஞுகுப்தனே நான் மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன். உனக்கு மூன்று வரங்கள் கொடுக்கிறேன் கேள்", என்றார் பெருமாள்.

"1. பகவானே! இந்த க்ஷேத்திரத்தில் நீ என்றும் நிலையாக இருந்து உன்னை வழிபடுபவர்களுக்கு ப்ரத்யக்ஷமாகி அருள்புரிய வேண்டும்.

2. இந்த க்ஷேத்திரத்தில் வசிக்கும் உயர்திணை, அஃறிணைப் பிராணிகளுக்கு இறந்தபின் பரமபதத்தை அருள்புரிய வேண்டும்.

3. மஹாபாதகங்களைச் செய்தவர்களாக இருந்தாலும், அறிந்தோ, அறியாமலோ இந்த க்ஷேத்திரத்திற்குள் அவர்கள் வருவார்களானால் அவர்களுடைய பாபங்களை விலக்கி அருள்புரிய வேண்டும்"- என்று மூன்று வரம் வேண்டிப் பெற்றார் யக்ஞுகுப்தர்.

## *ஏழாவது அத்தியாயம்*

இனி, இந்த க்ஷேத்திரத்தில் உள்ள உத்தமமான தீர்த்தங்களின் மகிமைகளைக் கூறவேண்டும் என்று ஜைமினி கேட்கப் பிருகு சொன்னார்.

பாவன விமானத்தின் பக்கத்தில் இந்திர தீர்த்தம் உள்ளது. முன்காலத்தில் கௌதமரின் சாபத்தால் துன்பமுற்ற இந்திரனின் துன்பத்தை நீக்கி ஸஹஸ்ராக்ஷன் என்ற பெருமையைக் கொடுத்தது. இது நீராடுபவர்களின் எல்லாப் பாவங்களையும் நீக்க வல்லது. சித்திரை மாதத்தில் செவ்வாய்க் கிழமையோடு கூடிய அஷ்டமி திதியிலோ, உத்ஸவ காலங்களிலோ, திருவோண நக்ஷத்திரத்திலோ இந்திரபுஷ்கரிணியில் நீராடுபவர்கள் நற்கதியை அடைவார்கள். இந்தத் தீர்த்தத்தின் கரையில் செய்யும் தர்மங்கள் எல்லாம் அனந்தமான பலனைத் தரும்.

## *எட்டாவது அத்தியாயம்*

பாவன விமானத்தின் தென்புறத்தில் ஜமதக்னி தீர்த்தம் உள்ளது. ஜமதக்னியின் புத்திரரான பரசுராமரால் ஏற்படுத்தப்பட்டதால் இந்தப் பெயர் இதற்கு ஏற்பட்டது. பரசுராமர், தன் தந்தையைக் கொன்ற கார்த்த

வீரியனையும் அவனை ஒத்த துஷ்ட க்ஷத்திரியர்களையும் அழிப்பதற்காக இந்த க்ஷேத்திரத்தில் நரசிம்மனைக் குறித்துத் தவம் செய்தார். இவரிடத்தில் ப்ரீதி அடைந்த பெருமான் இவருக்குத் தரிசனம் கொடுத்து வில்லையும் அம்பையும் கொடுத்தருளினார். பரசுராமர் அவர்களை வதம் செய்து மீண்டும் நரசிம்மவனம் வந்து ஜமதக்னி தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்து தம் முன்னோர்களுக்கும் தர்ப்பணம் செய்தார். இந்தத் தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்தால் பிரம்மஹத்யாதி பாபங்களைச் செய்தவர்களும் தூய்மையடைவார்கள். பித்ரு கார்யங்களைச் செய்தால் பித்ருக்களும் புண்ணிய லோகங்களை அடைவார்கள்.

பாவன விமானத்தின் மேற்குப் புறத்தில் உள்ளது ப்ருகுதீர்த்தம். ப்ருகு முனிவர் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் இம்மூவர்களுள் யார் சிறந்தவர் என்பதைப் பரீட்சிப்பதற்காக முதலில் பிரம்மலோகம் சென்றார். அங்குப் பிருகு முனிவர் வந்ததையே கவனிக்காமல் அலக்ஷ்யமாக இருந்துவிட்டார் பிரம்மதேவர். இவர் ரஜோகுணமுடையவர் என்று தீர்மானித்து விட்டுக் கைலாயம் சென்றார் ப்ருகு. அங்கு ருத்ரன் பார்வதியோடு ஏகாந்தத்தில் இருக்கிறார் என்று நந்திகேசுவரர் கூறினார். இவரைத் தமோகுணமுடையவர் என நிச்சயித்து வைகுண்டம் சென்றார். வேகமாக உள்ளே சென்று விஷ்ணுவைக் காலால் உதைத்தார். உடனே, விஷ்ணு பதை பதைத்து எழுந்து என்னை உதைத்ததால் தங்கள் கால் வலிக்குமே என அன்பொழுகக் கூறி உதைத்த ப்ருகுவின் காலைப் பிடித்து விட்டாராம். இவர்தான் ஸத்வகுணம் உடையவர் எனத் தீர்மானித்தாராம் ப்ருகு.

விஷ்ணுவை உதைத்ததால் ஏற்பட்ட பாவம், மூன்று மூர்த்திகளுக்குள் வேற்றுமை கல்பித்த பாவம் ஆகிய இவை விலக இங்குள்ள தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து நரசிம்மரை உபாசித்துப் பாவம் நீங்கப் பெற்றாராம். ப்ரூணஹத்தி முதலானவைகள் செய்த பாவங்கள் நீங்கப் ப்ருகு தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து நரசிம்மனைத் தரிசிக்க வேண்டும்.

பாவன விமானத்தின் வடமேற்கு மூலையில் இருப்பது வாமன தீர்த்தம். முன்காலத்தில் கச்யபர் என்னும் ரிஷி நாராயணனைக் குறித்துத் தவம் செய்தார். நாராயணனே தமக்கு மகனாகவும், இந்திரனுக்கும் தம்பியாகவும் அவதரிக்க வேண்டும் என்று வேண்டினார். அவருக்கு நரசிம்மன் தரிசனம் கொடுத்து அவர் இஷ்டப்படியே உபேந்திரனாக அவதரிப்பதாக வரம் கொடுத்தார். தமது முத்த சகோதரனான இந்திரனின் ஐச்வரியத்தை அபகரித்த மஹாபலியிடம் யாசகனாகச் சென்று திரிவிக்ரமனாக ஆகி மூவுலகையும் ஈரடியால் அளந்து தேவேந்திரனிடம் கொடுத்தார். எந்தத் தீர்த்தத்தின் கரையில் கச்யபருக்காக வாமனரூபம் எடுத்தாரோ அந்த இடமே வாமன தீர்த்தம். இதில் நீராடுபவர்கள் நல்ல மக்களைப் பெறுவார்கள். பொருளை விரும்பியவர்கள் இந்திரனுக்குச் சமமான பொருளை அடைவார்கள். கன்னிகை நல்ல கணவனையும், ஆண் நல்ல மனைவியையும் அடைவர். தம்பதிகளுக்குள் அன்யோன்யமான அன்பு உண்டாகும்.

ஐந்தாவது தீர்த்தம் கருடனால் உண்டாக்கப்பட்டது.

பகவான் தசரதனுக்கு மகனாய்ப் பிறந்து . பித்ருவாக்ய பரிபாலனத்துக்காகக் காட்டிற்குச் சென்றார். அங்கு ராவணன் சீதையை அபகரித்தான். நடுவில் தடையாக இருந்தது சமுத்ரம்தான். அணை கட்டுவதற்கு இடம் கொடுக்க வேண்டும் என்று ஸமுத்ர ராஜனைக் குறித்துத் தவம் செய்தார். ஸமுத்ரராஜன் வராமற் போகவே கோபங்கொண்ட ராமர் ஆக்னேயாஸ்திரத்தைப் பிரயோகித்துக் கடலை வற்றச் செய்தார். அணை கட்டிய பிறகு கருடனைக் கூப்பிட்டு நீரால் கடலை நிரப்பும்படி கட்டளையிட்டார். ராமரின் கட்டளைப்படியே தம் அலகால் பூமியைக் கீறி அதிலிருந்து நீர்பெருகிக் கடலை நிரப்பும்படி செய்தார். மேலும், அந்தக் கருடன் பாவன விமானத்தின் வடபால் தவம் செய்து திருமாலுக்குத்தான் வாகனமாக இருக்கும் பேற்றினையும் பெற்றார் அதுமுதல் அந்தத் தீர்த்தம் கருடதீர்த்தம் என்று அழைக்கப்படுகிறது. பசு,பக்ஷி முதலியவைகளும் மனிதர்களும் இந்தத் தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் உடலில் உள்ள எல்லாப் பிணிகளும் நீங்கி நீண்ட ஆயுளும் பெற்று வாழ்வார்கள். இம்மை மறுமைகளில் நன்மை பெறுவர் என்று விளக்கமாகக் கூறினார்.

இந்த நிருசிம்ம வனமாகாத்மியத்தைப் படித்தவர்கள், கேட்டவர்கள் எல்லாப் பாவங்களினின்றும் விலகி மோட்சமடைவார்கள். பல வேள்விகள் வேட்ட பயனைப் பெறுவர்.

இவ்வூரைப் பற்றிச் சுருக்கமாகத் தெரிந்துகொள்ள ஆசைப்படுபவர்களுக்குக் கீழ்கண்ட முறையில் கூறலாம்.

| | | |
|---|---|---|
| ஊர் பெயர் | : | சிங்கர் கோயில் |
| புராணப் பெயர் | : | கிருஷ்ணாரண்யக்ஷேத்ரம் |
| ஸ்வாமி பெயர் | : | லக்ஷ்மி நரஸிம்மர் |
| தாயார் பெயர் | : | கனகவல்லித் தாயார் |
| விமானத்தின் பெயர் | : | பாவன விமானம் |
| தீர்த்தங்கள் ஐந்து | : | ஜமதக்னி தீர்த்தம், இந்திர தீர்த்தம், ப்ருகு தீர்த்தம், வாமன தீர்த்தம், கருட தீர்த்தம். |

இந்தியாவிலேயே அபூர்வமாக இரண்டு இடங்களில்தான் நரசிம்மர் பதினாறு கைகளுடன் காட்சியளிக்கிறார். அவ்விரு க்ஷேத்திரங்களுள் ஒன்று சிங்கர் கோயில்.

மூர்த்தியின் கைகளில் காணப்படும் ஆயுதங்களும் அவற்றின் நிலைகளும். வலப்புறம் 1.பதாகஹஸ்தம், 2.ப்ரயோக சக்ரம், 3.க்ஷுரிகா என்னும் குத்துக்கத்தி, 4.பாணம், 5.ராக்ஷஸனின் தலையை அறுத்தல்,

6.கத்தியால் அசுரன் ஒருவனைக் கொல்லுதல், 7.இரணியனின் காலை அழுத்திப் பிடித்தல், 8.இரணியனின் குடலைக் கிழிப்பது, இடப்புறக் கைகளில், 9.குடல்மாலையைப் பிடித்திருப்பது, 10.சங்கம், 11.வில், 12.கதை, 13.கேடயம், 14.வெட்டப்பட்ட தலை, 15.இரணியனின் தலையை அழுத்திப் பிடித்திருப்பது. 16. குடலைக் கிழிப்பது.

இவ்வாலயம் வைகானஸ முறைப்படி பூஜைகள் நடக்கும் இடம். இவ்வூரில் கல்வி கேள்விகளில் வல்ல பல சான்றோர்கள் இருந்திருக்கிறார்கள். மூலஸ்தானம் மட்டும்தான் பழமையானது. தாயார் சந்நிதி, ஆண்டாள் சந்நிதி இவைகள் பிற்காலத்தவையாக இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது.

## கல்வெட்டுக்கள் :

இதுவரை தலபுராணத்தைப் பற்றிப் பார்த்தோம். இந்த ஆலயத்துள் துண்டுக் கல்வெட்டுக்கள் உள்ளன. இங்குள்ள எல்லாக் கல்வெட்டுக்களும் முற்றப்பெறாத கல்வெட்டுக்களே. இக்கோயிலைப் பிரித்துக் கட்டும்பொழுது கற்கள் பல மாறியிருக்கக் கூடும் என்று தோன்றுகிறது. இராஜகோபுரவாயிலில், 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்தமைதியுடைய ஒரு கல்வெட்டு செய்யுள் வடிவில் அமைந்திருக்கிறது. இப்பாடல் எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்த வடிவில் அமைந்துள்ளது.

*திருமருவுசீர் (கோ)யில் நரசிங்கர் மகிழவு மகாகநக வல்லி மகிழ*
*திருமார்பில் சூடிக்கொடுத்திடும் நாச்சியார் சிந்தையில் களிகூட...*

இக்கல்வெட்டு முற்றுப்பெறவில்லை.

மஹாமண்டபத்தின் தெற்குச் சுவரில் கி.பி.12 ஆம் நூற்றாண்டின் எழுத்தமைதியுடைய கல்வெட்டு ஒன்று உள்ளது. இக்கோயிலில் உள்ள கல்வெட்டுகளில் இதுவே பழமையானது.

1. பிராட்டிடியா...
2. ....ம் இவன்தம்...
3. .....பையர்க்கு...

இவ்வாறு இங்கு உள்ள கல்வெட்டுக்கள் எல்லாம் முற்றுப்பெறாதவைகளாக உள்ளன.

இவ்வூர் நீண்ட சதுரமான மாடவீதிகளையும், கிழக்கு மேற்காகச் சன்னதி வீதியையும் உடையது. மாடவீதியில் தென்மேற்கு பிள்ளையார் கோயில், சந்நிதிக்கு நேர் எதிரில் தேர்முட்டிக்குப் பக்கத்தில் ஆஞ்சநேயர் கோயில் கிழக்குப் பார்த்து அமைந்துள்ளது. வடமேற்கு மூலையில் சாஸ்தாவின் ஆலயம் இருக்கிறது. இரண்டு மாரியம்மன் கோயில்கள், ஒரு காளிகோயில் ஆகியவை உள்ளன.

மேற்குப் பார்த்து ஐந்து நிலையுடை ராஜகோபுரம் அமைந்துள்ளது. இதில் நூற்றுக்கு மேற்பட்ட சுதை உருவங்கள் உள்ளன. கோபுரத்திற்கு உட்புறத்தில் துர்க்கை சந்நிதியும்,இருபத்து நான்கு தூண்களை உடைய மண்டபமும் அமைந்திருக்கின்றன. வைஷ்ணவ சித்தாந்தப்படி தத்துவங்கள் இருபத்து நான்கு. சந்நிதிக்கு எதிரில் பிள்ளையார் சந்நிதி உள்ளது. இங்குத் திருக்குளமும் உள்ளது.

இதற்கு உள்ளே சென்றால் பலிபீடம், கொடிமரம் உள்ளன. பிரதக்ஷிணமாக வரும்பொழுது கிழக்குப் பார்த்து ஆண்டாள்சந்நிதியும், இச்சந்நிதிக்கு நேர் எதிரே அதாவது, வடகிழக்கு மூலையில் யாக சாலையும், தென்கிழக்கு மூலையில் திருமடைப்பள்ளியும் அமைந்திருக்கின்றன. தெற்குப் பார்த்து இராமர் சந்நிதியும் கிழக்குப் பார்த்து தாயார் சந்நிதியும் அமைந்துள்ளன. கொடிமரத்திற்கு எதிரில் அமைந்திருப்பது முப்பத்தாறு தூண்களையுடைய மண்டபம். இம்மண்டபத்தில் சந்நிதியைப் பார்த்தவாறு கருடன் சந்நிதியும் தெற்கு நோக்கி விஷ்வக்ஸேனர் சந்நிதியும் உள்ளன. இதற்கு உள்ளே நான்கு ஸ்தம்பங்களை உடைய மண்டபமும் ஆழ்வார்கள் சந்நிதியும் உள்ளன. இதற்கும் உள்ளே ஜயர், விஜயர் என்னும் இரு துவாரபாலகர்கள் கர்பக்ருஹ வாயிற்படிக்கு இருபுறமும் இருக்கிறார்கள்.

மூலாலயத்தில் பெரிய வடிவில் பதினாறு கைகளுடன் இரணியனைச் சங்கரிப்பவராகப் பெருமாள் எழுந்தருளியுள்ளார். கீழே இடப்புறம் இரணியனின் மனைவியான நீலாவதி, கீழே வலப்புறம் மூன்று அசுரர்கள்,பிரகலாதர், சுக்கிரர் வசிட்டர் ஆகியவர்கள் இருக்கிறார்கள். வடக்கு நோக்கியவர்களாகச் சிறிய வடிவில் யோக நரசிம்மர், பால நரசிம்மர் என இருவர் இருக்கிறார்கள்.

ஆலயத்திற்குப் பின்புறம் தோப்புக்குள் பத்துத் தூண்களையுடைய மண்டபம் உள்ளது. இதில் தாயாருக்கு ஊஞ்சல் நடைபெறுகிறது.

திரு. ஆனந்தரங்கப் பிள்ளை அவர்களின் நாட்குறிப்பிலிருந்து பிரஞ்சு அரசாங்கம் நரசிம்ம சுவாமிக்கு அவிசுப்பாக்கத்தில் உள்ள குளத்தில் தெப்போற்சவம் செய்து வந்ததாகத் தெரிகிறது.

சந்நிதிக்கு எதிரில் இருக்கும் விநாயகரை எடுத்துக் கோபுர நுழைவாயிலுக்குப் பக்கத்தில் வைக்க எண்ணி ஒரு கோயில் அமைத்து விநாயகரை எடுத்ததும் ஊரில் பெரிய தீவிபத்து ஏற்பட்டதால் பழைய இடத்திலேயே வைத்து விட்டதாகப் பரம்பரை வரலாறு உள்ளதுழூ

ஆர்க்காட்டு நவாப்பு நரஸிம்மருக்குத் திருவாபரணம் சமர்ப்பித்தார். பிரஞ்சுக்காரர்களும் சுவாமிக்குத் திருவாபரணங்கள் சமர்ப்பித்து உள்ளனர்.

புராணம், சரித்திரம் ஆகிய இருவகைகளிலும் சிறப்புடையதும் இந்தியாவிலேயே அபூர்வமானதுமான ஸ்ரீ நரஸிம்மர் சந்நிதி உள்ள தலம் சிங்கர்குடி என்பதை இதுவரைக் கண்டோம்.

## *திருவயிந்தை தேவநாதனும் சிங்கர்குடிக்கோயில் சிங்கப் பெருமானும் :*

அயிந்தை தோத்திரமாலை என்ற நூலில் தேவநாதனே சிங்கர்கோயிலில் நரசிங்கராக இருக்கிறான் என்று வருகிறது.

மூவராகிய மூர்த்தியே! உபயநாச்சியாருடன் உகந்திருப்பவரே! விரும்பியோர் விரும்பியவண்ணம் சேவை சாதிப்பவரே! நெற்றிக்கண்ணரே! அழகிய சடையினை உடையவரே! திருக்கரத்தில் தாமரை மலரைத் தாங்கியவரே! நெடுமாலே! கருங்கடலில் பள்ளி கொண்டவரே! ஆதிவராகரே! அரசரே! நான்மறைப் பொருளே! உலகை உண்டவரே! ஆள் அரியே! திரிவிக்கிரமரே! ஏழ்விடை பொருதவரே! ராமபிரானே! பார்த்தசாரதியே! திருஅயிந்தைப் பரஞ்சோதியே! ஐவர் என் மெய்யில் குடியேறி அலைக்கழிக்கின்றமைக்கு அஞ்சுகிறேன். ஐயனே! மெய்யனே! நின்னடியன்றி மற்றறியேன்! நின்னையடைந்தேன். அடியேற்கு இரங்கி அருள்புரிவீராக!

நரசிங்கனே தெய்வநாயகனாகக் காட்சி அளிக்கிறார் என்று திருமங்கை ஆழ்வார் கூறுகிறார்.

*மாறுகொண்டு உடன்றெதிர்ந்தவல்லவுணன் தன் மார்பகமிரு பிளவாக*
*கூறுகொண்டு அவன் குலமகற்கு இன்னருள் கொடுத்தவனிடம் மிடைந்து*
*சாறு கொண்டமென் கரும்பிளங்கழைதகைவிசும் புறமணிநீழல்*
*சேறு கொண்ட தண்பழனமதெழில் திகழ் திருவயிந்திரபுரமே.*

திருவயிந்திரபுரத்தல புராணத்துள் தேவநாதனே சிங்கர் கோயில் நரசிம்மராக அருள்புரிகிறார் என்று வருகிறது.

எனவே, க்ஷேத்திரமாலை, திருமங்கை மன்னனின் திருவாக்கு, தலபுராணம் என்ற மூன்று பிரமாணத்தையும் கொண்டு திவ்வியதேசப் பெருமானான தேவநாதனே சிங்கர்கோயில் நரசிங்கராக இருக்கிறான் என்பது உறுதிப்படுகிறது.

## *சிங்கர்கோயிலும் ஆசாரிய சம்பந்தமும் :*

அஹோபில மடத்தை அலங்கரித்த 4ஆம் பட்டம் ஜீயர் ஸ்ரீமுஷ்ணத்திலிருந்து பாரத தேசயாத்திரை செய்துவிட்டுக் கடைசியாகச் சிங்கர்கோயில் வந்து இங்குப் பிருந்தாவனத்தில் சமாதி கொண்டு இருக்கிறார்.

இப்பெரியாரது திருநாமம், ஸ்ரீவண்சடகோப ஸ்ரீநிவாச யதீந்திர மஹாதேசிகன் என்பது. இந்தச் சுவாமியின் திருநட்சத்திரம் மார்கழி மாதம் சித்திரை நட்சத்திரம். குரோதன வருஷம் தைமாதம் கிருஷ்ணசதுர் தசியில் பரமபதித்தார் என்று தெரிகிறது.

இப்பெரியார் சிங்கர்கோயில் ஆலயத்திலேயே இருந்துகொண்டு சாஸ்திரகாலக்ஷேபம் செய்து வந்தாராம். சில காலம் கழித்துக் கோகுலம், பிருந்தாவனம், அயோத்தி ஆகிய திவ்யதேசங்களில் உள்ள எம் பெருமான்களை மங்களாசாஸனம் செய்துகொண்டு அஹோபிலம் திரும்பினார். மீண்டும், சிங்கர்கோயிலுக்கே எழுந்தருளினார். சின்னாட்குப் பின்னர்த் தம் திருமேனி தளர்வுற்றதால் தமக்கு அடுத்து மாலோலனைத் திருவாராதனம் செய்யச் சீடனை நியமிக்க எண்ணினார். தகுதியானவரைக் கர்ணாமையால் தம்க்குப்பின் திருமடத்தை நிர்வகிக்கத் தக்க ஒருவரைத் தந்தருளுமாறு சிங்கர் கோயில் நரசிம்மரிடம் விண்ணப்பித்தார். அன்றிரவு ஜீயரின் கனவில் நரசிம்மர் தோன்றி ஸர்வதந்திரஸ்வதந்திரராய் இந்த ஆஸ்தானத்தை நிர்வகிக்கத்தக்க ஒருவர் வருகிறார் என்று கூறி மறைந்தார். இதே போல 5-ஆவது பட்டமாக வர இருந்தவரிடம் சென்று கனவில் நீர் நம்மை ஆராதிக்க வாரும் என்று அழைத்து மறைந்தார்.

இதன்படி 4ஆம் பட்டம் ஸ்ரீநிவாஸமஹாதேசிகனிடம் உபதேசம் பெற்று 5-ஆவது பட்டமாக ஸர்வதந்திர ஸ்வதந்திர சடகோப மஹாதேசிகன் என்ற திருநாமம் அருளப்பெற்றார். இவ்வாறு, குருசீடர் இருவருக்கும் சிங்கரி கோயில் சிங்கப்பெருமான் கனவில் காட்சி கொடுத்தார் என்று அஹோபிலமடத்தின் வரலாறு கூறுகிறது. 4ஆவது பட்டம் தேசிகனின் பிருந்தாவனம் சிங்கரிகோயில் வடகிழக்கு மூலையில் ஜமதக்னி தீர்த்தக்கரையில் அரசமரத்தின் அருகில் அமைந்துள்ளது. திருக்கோயிலின் தூணில் இவரது உருவம் என்று எண்ணத்தக்க நிலையில் ஒரு திரிதண்டி சந்நியாசியின் உருவம் காணப்படுகிறது.

இது தொடர்பாக ஒரு சுவையான நிகழ்ச்சி கூறப்படுவது உண்டு. 5ஆவது ஜீயர் தென்னாசார்ய சம்பிரதாயத்தைச் சார்ந்தவர். பெருமானுடைய ஆணையால் 4ஆவது ஜீயரிடம் வந்தார். வடகலை மடத்தை எவ்விதம் தென்கலையைச் சேர்ந்தவரிடம் ஒப்படைப்பது என்ற சிக்கல் நேர்ந்தபொழுது தங்கள் திருவுள்ளப்படி செய்யலாம் என வந்த சீடர் கூறினார். பிறகு குரு உன் காலம் வரை உபயகலையைச் சார்ந்த ஆசாரமும் இங்கு நடக்கட்டும். உனக்குப் பிறகு இம்மடத்தை வடகலையாரிடம் ஒப்படைக்க வேண்டும் என்று ஆணை இட்டார். இதன்பிறகு 5ஆவது பட்டம் ஆசாரியர் உபதேசம் பெற்றுத் துறவியானார். மற்றோர் உண்மை நிகழ்ச்சி : திருநெல்வேலி மாவட்டத்தில் பாளையங்கோட்டைக்கு அருகில் ஒரு சிற்றூர். அங்கு அந்தணர் ஒருவரின் வீட்டில் நரசிம்ம சாளக்கிராமம் வழிபடப்பெற்று வந்தது. பரம்பரையாகச் சுமார் ஐம்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு இம்மரபில் வந்த வேதப்புலவரான அந்தணர் உள்ளங்கசிந்து இறைவனை வழிபடவே பெருமானுடைய சான்னித்தியம் ஏற்பட்டது.

அவர்கள் வீட்டில் மாடுகள் வளர்க்கும் வழக்கும் உண்டு. தொழுவத்தில் இயல்பாக இருந்த மாடுகள் மிரளவும் அலறவும் ஆரம்பித்தன.

விலங்குகளும், பறவைகளும் பாராசைகாலஜி என்றும் உள்ளுணர்வு மூலம் எதிர்வரும் நிகழ்ச்சிகளையும் சுற்றுச்சூழல்களையும் சுற்றியுள்ளவர்களையும் உணர்ந்து கொள்கின்றன என்கின்றனர் விஞ்ஞானிகள்.

மனிதன் ஆறாவது அறிவை உடையவனாக இருந்தாலும் இவற்றை உணர இயலவில்லை.

நனவு, கனவு, ஆழ்துயில் ஆகியவைகள் பிராணிகள் அனைத்திற்கும் பொதுவானவை: எனவே, மனிதன் முதல் எல்லா உயிரினங்களும் சுஷுப்தி நிலையில் அஞ்ஞானத்தோடு கூடிய சுகானுபவத்தை அனுபவிக்கின்றன என்று கூறலாம். தம்மிடம் அன்பு செலுத்துபவரிடம் தாம் அன்பாயிருப்பது எல்லாப் பிராணிகளுக்கும் உரியது. அன்பை உணர முடிவதாலும், பிராணிகள் எல்லாம் ஆசாரியன் முகமாகவோ தாமாகவோ பகவதானுபவத்தை அடைந்து ஞானியாக முடியும், பகவதனுபவம் என்பது பொதுவானது, இயல்பானது, எல்லாப் பிராணிகளுக்கும் பொதுவானது.

ஸ்ரீ நரஸிம்ம மூர்த்தி சிங்கர்குடியில் மட்டுமன்றிப் பாளையங்கோட்டை போன்ற பல இடங்களிலும் திருவிளையாடல் புரிவர்போலும்.

ஸ்ரீ

# ஸ்ரீ மாலோல கைங்கர்ய சபை

*புதுச்சேரி*

## நன்றியுரை

ஸ்ரீ சிங்கர்குடி ஸ்தல வரலாறு என்னும் இச்சிறிய நூலை எங்கள் வேண்டுகோளுக்கு இணங்கி இயற்றிக் கொடுத்த ஸ்ரீமான் ரா.சுப்பிரமணிய ஐயர் அவர்களுக்கும் இந்நூலை மனமுவந்து அச்சிட்டுக்கொடுத்து உதவிய ஸ்ரீ தேவநாதன் அவர்களுக்கும் மாலோல கைங்கர்ய சபையின் சார்பில் அடியோங்களுடைய பிரணாமபூர்வம் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

**P.R.விஜயராகவாச்சாரி**
காரியதரிசி
ஸ்ரீ மாலோல கைங்கர்ய சபை
புதுச்சேரி

## ஸ்ரீந்ருஸிம்ஹ அங்கமந்திரம்

*ஓம் உம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யஶ்ச ப்ரஹ்மா தஸ்மை வை நமோ நம:*

*ஓம் க்ரம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யஶ்ச விஷ்ணு தஸ்மை வை நமோ நம:*

*ஓம் வீம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யஶ்ச மஹேஶ்வர: தஸ்மை வை நமோ நம:*

*ஓம் ரம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யஶ்ச புருஷ: தஸ்மை வை நமோ நம:*

*ஓம் மம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யஶ்ச ஈஶ்வர: தஸ்மை வை நமோ நம:*

*ஓம் ஹாம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யா ஸரஸ்வதீ தஸ்மை வை நமோ நம:*

*ஓம் விம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யா ஸ்ரீ: தஸ்மை வை நமோ நம:*

*ஓம் ஷ்ணும் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யா கௌரீ தஸ்மை வை நமோ நம:*

*ஓம் ஜ்வம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யா ப்ரக்ருதி: தஸ்மை வை நமோ நம:*

*ஓம் லம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யா வித்யா தஸ்மை வை நமோ நம:*

*ஓம் தம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யஶ்சோங்கார: தஸ்மை வை நமோ நம:*

*ஓம் ஸம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யா: சதஸ்ரோர்த்தமாத்ராஸ்மை வை நமோ நம:*

*ஓம் வம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யே ச வேதா: ஸாங்கா: ஸஶாகா தஸ்மை வை நமோ நம:*

*ஓம் தோம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யே பஞ்சாக்நய: தஸ்மை வை நமோ நம:*

ஓம் மும் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யா: ஸப்த வ்யாஹ்ருதய: தஸ்மை வை நமோ நம:

ஓம் கம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யே சாஷ்டௌ லோகபாலா: தஸ்மை வை நமோ நம:

ஓம் ந்ரும் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யேசாஷ்டௌ வஸவ: தஸ்மை வை நமோ நம:

ஓம் ஸிம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யே ச ருத்ரா: தஸ்மை வை நமோ நம:

ஓம் ஹம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யே சாதித்யா: தஸ்மை வை நமோ நம:

ஓம் பீம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யே சாஷ்டௌ க்ருஹா: தஸ்மை வை நமோ நம:

ஓம் ஷம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யாநி பஞ்ச மஹாபூதாநி தஸ்மை வை நமோ நம:

ஓம் ணம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யச்ச கால: தஸ்மை வை நமோ நம:

ஓம் பம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யச்ச மநு: தஸ்மை வை நமோ நம:

ஓம் த்ரம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யச்ச ம்ருத்யு: தஸ்மை வை நமோ நம:

ஓம் ம்ரும் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யச்ச யம: தஸ்மை வை நமோ நம:

ஓம் த்யும் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யச்ச அந்தக: தஸ்மை வை நமோ நம:

ஓம் ம்ரும் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யச்ச ப்ராண: தஸ்மை வை நமோ நம:

ஓம் த்யும் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்
யச்ச ஸூர்ய: தஸ்மை வை நமோ நம:

*ஓம் நம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யஶ்ச ஸோம: தஸ்மை வை நமோ நம:*

*ஓம் மாம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யஶ்ச விராட்புருஷ: தஸ்மை வை நமோ நம:*

*ஓம் ம்யம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யஶ்ச ஜீவ: தஸ்மை வை நமோ நம:*

*ஓம் ஹம் ஓம் யோ வை ந்ருஸிம்ஹோ தேவோ பகவாந்*
*யஶ்ச ஸர்வம் தஸ்மை வை நமோ நம:*

## ருண விமோசந ந்ருஸிம்ஹ ஸ்தோத்ரம்

கடன் தொல்லைகளால் கஷ்டப்படுபவர்கள் இந்த ஸ்தோத்ரத்தைப் பாராயணம் செய்தால் கடன் நீங்கி சுகமுண்டாகும்.

தேவதா கார்ய ஸித்யர்த்தம்
ஸபாஸ்தம்ப ஸமுத்பவம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே

லக்ஷ்ம்யாலிங்கித வாமாங்கம்
பக்தாநாம் வரதாயகம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே

ஆந்த்ரமாலாதரம் ஶங்க
சக்ரரப்ஜயுத தாரிணம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே

ஸ்மரணாத் ஸர்வ பாபக்நம்
கத்ரூஜ விஷநாஶநம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே

ஸிம்ஹநாதேந மஹதா
திக்தந்தி பயநாஶநம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே

ப்ரஹ்லாத வரதம் ஸ்ரீஶம்
தைத்யேஶ்வர விதாரிணம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே

க்ரூரக்ரஹை: பீடிதாநாம்
பக்தாநா மபயப்ரதம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே

வேதவேதாந்த யஜ்ஞேஶம்
ப்ரம்ஹருத்ராதிவந்திதம்
ஸ்ரீந்ருஸிம்ஹம் மஹாவீரம்
நமாமி ருணமுக்தயே

யஇதம் படதே நித்யம்
ருணமோசந ஸம்ஜ்ஞிதம்
அந்ருணி ஜாயதே ஸத்யோ
தநம் ஶீக்ரம் வாப்நுயாத்

ஸ்ரீ:

# நரசிம்மாவதாரம்

இரணியன், வரபலத்தாலே பூண்கட்டின முரட்டுடலும் போர்த்தினவு கொண்ட தோள்களும், அவ்வரத்தை உணவாக இட்டு வளர்த்த மிக்க வலிமையும் கொண்டவன். பரஹிம்ஸை பண்ணுகைக்குத் தேவதைகள் பக்கலிலே வரம் பெற்று அதுதானே யாத்திரையாய்த் திரிந்த ஆஸுரப்ரக்ருதி இறந்து கிடந்த போதும் பிடித்த வேலை விடாமல் வேலைத் தனக்கு இலக்கணம் என்னும் படி விழுந்து கிடந்தவன்.

அவன் வேல், எதிரிகள் உடலைப் புண்படுத்தித் திரிவதே தொழிலாகக் கொண்டது. இவ்வேலுக்கு ஆயுதசாலையில் ஓய்வு கொள்ள நேரமில்லை. நிணமும், சதையும், குடலும் சூழப்பெற்று, மாம்ஸ பக்ஷிணிகளான கழுகும் பருந்தும் பேயும் சுற்றிவரத் திரிந்து கொண்டே இருக்கும் இவ்வேல்.

